உ
ஓம் தத் ஸத்.

# ஸ்ரீ பிரார்த்தனை மாலையும், பக்திப் பாடல்களும்.



ஸ்ரீலஸ்ரீ இராமசாமி ஸ்வாமிகள்

புணர்ந்த பாவமெலாம் பரிபூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே.

குரோதி-ஹூ வைகாசி-மீ 14-உ (27-5-1964)
10-வது ஆண்டு குருபூஜா மகோத்சவத்தில்
வெளியிடப்பட்டது.

# அருள் மொழிகள்



| | | |
|---|---|---|
| சுறுசுறுப்பாயிரு | ஆனால் | படபடப்பாயிராதே |
| பொறுமையாயிரு | ,, | சோம்பலாயிராதே |
| சிக்கனமாயிரு | ,, | கருமியாயிராதே |
| அன்பாயிரு | ,, | அடிமையாயிராதே |
| இரக்கங்காட்டு | ,, | ஏமாந்துபோகாதே |
| கொடையாளியாயிரு | ,, | ஓட்டாண்டியாய்விடாதே |
| வீரனாயிரு | ,, | போக்கிரியாயிராதே |
| இல்லறத்தை நடத்து | ,, | காமவெறியனாயிராதே |
| பற்றற்றிரு | ,, | காட்டுக்குப் போய்விடாதே |
| நல்லோரை நாடு | ,, | அல்லோரை வெறுக்காதே |

உணர்ந்து ஒழுகினால், உயர்வடைவாய்.

உன் மனதிற்கு நீ அடிமையானால்,

உலகத்திற்கு நீ அடிமையாவாய்.

உன் மனம் உனக்கு அடங்கினால்,

உலகம் உனக்கு அடங்கும்.

உன்னை பிறர் நேசிக்க வேண்டுமா? நீ பிறரை நேசி.

உன்னிடத்தில் எப்படி பிறர் நடந்துகொள்ள விரும்புகிறாயோ, அப்படி நீ பிறரிடத்தில் நடந்துகொள்.

மறத்தைவிடு, அறத்தை நாடு, பயனடைவாய்.

நீ கடவுளை உணரவேண்டுமா?

அன்பாயிரு, உண்மையே சொல்.

அறிவாளியாயிரு, ஆண்மையோடிரு.








உ
பரமாத்மனே நம:

# முகவுரை.

—:O: —

சர்வேஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட சராசர உலகில் மானிடர் அறிவுமிக்குடையர் என்பது பிரசித்தம்; மனிதர் மாத்திரத்திற்கு இகபர உலக ஞானமும், உலகைப் படைத்துக் காத்தழிக்கும் இறைவன் ஒருவன் உண்டென்ற அறிவும் உண்டென்பது ஒப்பமுடிந்த தொன்றும்.

ஆனால், மனிதரில் கடவுளை அடைந்துய்வதற்காக அனந்த மதத்தினராய்ப் பிரிந்து தங்கள் மதத்தைத் தோற்றுவித்த மஹான்களின் உபதேசங்களை அவர்கள் காட்டிய வழியிலே அநுஷ்டித்து மலவிக்ஷேபங்கள் நீங்கிய சுத்த மனத்தினராய் இறைவனை வழிபட்டு உயர்நிலையையடைந்து வருகின்றனர்.

இங்ஙனம் வழிபட்டு வரும் பல மதத்தினரில், பரத கண்டத்திலுள்ள இந்து மதத்திலும் சைவம், வைணவம், சாக்தேயம் என மூன்று பிரதான சமயங்கள் இருந்து வருகின்றன; இங்ஙனம் பிரிந்திருப்பதற்குக் காரணம், ஆகமங்களும், புராணங்களுமேயாகும்; ஆகம புராணங்களில், சைவ ஆகமம், வைணவ ஆகமம், தேவி ஆகமம், சைவ புராணம், வைணவ புராணம், தேவி புராணமென்று பல பிரிவுகளுண்டு. இப்பிரிவுகளால் அவை

---

"உடலுக்கு உணவு அவசியம்; ஆத்மாவிற்குப் பிரார்த்தனை அவசியம்"

"பிரார்த்தனை என்பது வெறும் வேண்டுதலல்ல; அது ஆத்மாவின் தாகம்."

"நம்பிக்கையும், பிரார்த்தனையும் இல்லாத வேலைகள் மணமற்ற செயற்கைப் புஷ்பங்களைப் போன்றவை"

— மகாத்மா காந்தியடிகள்

களை அநுசரித்து அநுஷ்டிக்கும் அடியார்களும், பிரதானமான மூன்று பிரிவினர் ஆனார்கள். இவை யன்றி, இன்னும் ஜைன புத்தாதி அநேக அவைதிக மதங்களும் அவைகளின் ஆகமங்களும் உள்ளன; அவைகளை விரிக்கில் பெருகுமென விடுத்தனம்.

சைவாதி மூன்று சமயங்களின் காரணமான நூல் களும், அவைகளை அநுசரித்த பெரியோர்களால் இயற் றப்பெற்றகத்திய பத்தியங்களான நூல்கள் யாவும் தங்கள் தங்கள் மதத்தை உயர்த்தியும் மற்றவைகளை இழித்தும் கூறியுள்ளன. இதனால் இந்து மதத்தில் பல குறைகள் தோன்றி பிறமதத்தினர் பழிக்க ஏதுவாயின.

இறைவனது அவதாரமான ஆதி ஸ்ரீ சங்கரர் அவ தரித்து, முன் கூறிய ஆகம புராணங்களிலும், அவை களை அநுசரித்த மதத்தினரிடத்தும் உள்ள வேற்றுமை களை ஒழித்து, சமநெறியில் கண்டு ஒன்றே கடவுள் அவருக்குப் பல நாமங்களும் வடிவங்களும் மனிதரால் கற்பிக்கப்பட்டன. அவர் சச்சிதானந்தர், சர்வேஸ்வரர், சர்வாந்தர்யாமி, சர்வகாரணர், சர்வக்ஞர் சர்வநியந்தர், சர்வ சக்திமான், அணிமாதி அடஷ் ஐஸ்வரிய சம்பன்ன ரென உபதேசித்தும், நூல் எழுதியும் உபகரித்து, நம்ம னோர் உய்ய நன்னெறி காட்டினர். இவர் காட்டிய வழி அநுஷ்டித்து வரும் மதத்தை அத்வைதமென்று வழங்கு வது பிரசித்தம்.

எங்ஙனம் அம்புஜம், பங்கஜம், சரோஜம் என்பன ஆதிய நாமங்கள் ஒரே தாமரைக்குரியனவாமோ, அங்ஙனமே சிவன், விஷ்ணு, தேவி என்பன முதலிய ஈஸ்வர நாமங்கள் ஒரே இறைவனுக்குரியனவாகும். இங்ஙனம் ஏகனாய் சராசராத்மகமான சார்வப்பிரபஞ்சா திஷ்டானனாகிய பரமேஸ்வரன் ஜீவர்களின் நித்திய ரக்ஷகனும் பரமானந்தனுமாதலால் சர்வ ஜீவர்களும் வழிபட்டுத் தங்கள் மனமாசு (மலவிக்ஷேபங்கள்) நீங்கி

---

*“தியானமின்றி எவரும் முக்தி நிலையை அடைய முடியாது”*

— பகவத் கீதை

10-1

இறைவனருளால் சித்த சுத்தியைப்பெற்று, குருவை அடைந்து அவரருளால், உபதேசிக்கப்பெற்று கிரமமாக அகண்டைகரஸ ஆன்மஞானம் அடைந்து அதனுல் ஆவரணம் நீங்கி ஜீவன்முக்தராய் இனிவரும் தேக மில்லாதவராய் பரமானந்த பரமசீதளமான பரமான்மப் பிராப்தியைப் பெறுவர்; இது முக்திக்குச் சுருக்கமான கிரமமாகும்.

தற்காலத்தில் இந்து மதத்தில் திட்டமான ஈஸ்வர வழிபாட்டிற்குரிய பொதுவான பிரார்த்தனைப்பாக்கள் இல்லை. உள்ள பிரார்த்தனைப் பாக்கள் ஏதேனும் ஒரு தேவதையின் பரமாகவே உள்ளன. ஆதலால் இங்கு செய்துள்ள பிரார்த்தனைப்பாக்கள் பொதுவாகவும் யார் யார் எந்த எந்த தேவதையை உபாசித்தாலும் அந்த அந்த தேவதையை உபாசிக்கத்தக்கனவாகவே அமைக்கப்பெற்றுள்ளன. சந்தப்பாக்கள் எட்டும் குரு ஸ்துதிகளாகும். அதில் சங்கர தேசிக குருசரணம் என்பதில் உள்ள சங்கரபதம் ஆதிசங்கராசாரியருக்கும், பொதுவாக அவரவர் ஆசாரியர்களுக்கும் பொருந்தும். சங்கரன் என்ற சொல்லுக்கு சுகத்தைச் செய்கிற வன் என்று பொருளாதலால் சிஷ்யர்களைச் சுகாம்புதி வடிவாகச் செய்விக்கும் ஆசிரியர் யாவருக்கும் இந்த ஸ்துதிகள் பொருந்தும். மற்றும் நாம பஜனையில் சிவன், கௌரி, நாராயணன், ராமன், கிருஷ்ணன், முகுந்தன், முராரி என்பனவாகிய நாமங்கள் யாவும், ஒரே பரமேஸ் வரனுக்குரிய நாமங்களாகும்.

நாம் ஒவ்வொருவரும் காலை மாலைகளில் அவசியம் பிரார்த்தனை நாமஜபம் தியானம் சாஸ்திரபடனம் செய்யவேண்டுவது அவசியம். இங்ஙனம் தடையின்றி தினந்தோறும் ஈஸ்வர வழிபாடு செய்து வருவோமாயின் சர்வ பாபங்களும் விலகி மனம் எப்போதும் பரமசாந்தியடையும்.

---

"எல்லாம்வல்ல இறைவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பது தியானமேயன்றி வேறென்றில்லை"

— பாகவதம்

# ஸ்ரீலஸ்ரீ இராமசாமி சுவாமிகளின்

## சரித்திரச் சுருக்கம்.



சென்னை மாகாணத்திலே வடஆற்காடு ஜில்லாவைச் சார்ந்த கீழ்வல்லம் என்னும் கிராமத்தில் வன்னிய வமிசத்தில் வந்த பூசாரி கிருஷ்ண கவுண்டர் என்னும் பெயர் புனைந்த புண்ணியனுர்க்கு தென்னுட்டவருடன் என்னுட்டவரும் உய்ய (1896) துன்முகி வருடம் வைகாசி மாதம் எட்டாம் நாள் மகவாய்த் தோன்றினுர் நமது சுவாமிகள்.

இளமையில் கற்ருரிடத்தில் கலை பல பயின்று தாய் தந்தை குரு தெய்வம் ஆகியோரிடத்து அகலா அன்புடையவராய் ஒழுக்கத்தை உயிரெனக் காத்துவருங்கால், திருமணப் பருவம் அடைந்து விட்டதை அறிந்த தாய்தந்தையர்கள் தமது சுற்றத்தாரோடு திருமணம் செய்ய யோசித்துக்கொண்டிருந்ததை அறிந்த நமது சுவாமிகள் துறவிகளின் இயல்பை பிறவி முதலே பெற்றவராதலின் திடுக்கிட்டவராய் அன்றிரவு முழுதும் தூக்கமின்றியவராய், சுற்றத்தாரின் கருத்தைக் குறித்து நன்கு சிந்தித்து குடும்பத்திலிருந்து விலகிவிடுவதென்ற முடிவுசெய்து குடும்பத்தார் விழித்தெழுமுன் புறப்பட்டுக் கோவிலூர் மடத்தை அடைந்தார்.

ஆங்கே அம்மடத்திற்கதிபதியாய் அண்டினேர்க்கு அருள்புரிந்து ஆதரிப்பவராய் விளங்கிய ஸ்ரீ மஹாதேவ ஞானசாரியரை விதிப்படி சரணடைந்து அன்னரிடத்து கட்டளைமுதல் வாசிட்டம் ஈருக உள்ள வேதாந்த சாத்திரங்கள் அனைத்தையும் குற்றமின்றி குறுகிய காலத்தே கற்றறிந்து, துறவும் பெற்று, மடத்திலுள்ளவர்களில் மேலோராய் விளங்கலானுர்.

---

"பரிபூர்ணனந்த வடிவனுகிய பரம்பொருளை எவர்கள் பஜிக்கின்றுர்களோ அவர்கள் யாராயிருப்பினும் ' ஜீவன் முக்தர்கள் ஆவார்கள்."

— உபநிடதம்

c

இவ்வாறிருக்குங்கால் சாஸ்திரங்கள் வாயிலாகவும், ஆசிரியர் வாயிலாகவும் தாம் அறிந்த பொருளை தமதனுபவத்தில்பெற தனியிடத்திருந்து செய்யும் தியானத்தாலன்றி முடியாதெனத் துணிந்து அதற்குரிய சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் திருமடத்தின் சாதாரண விவகாரங்களை கவனித்துக் கொண்டிருந்த நம் சுவாமிகளுக்கு மடத்தின் பெரும் பொறுப்புள்ள விவகாரங்களை ஏற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. "பிறப்பறுக்க லுற்றார்க்கு உடம்பு மிகை" என்னும் இயல்புடைய சுவாமிகள் அப்பெரும் பொறுப்பை யாங்ஙனம் ஏற்பர்? ஏற்கார் என்க. ஆதலால் நமதெண்ணத்திற்கு ஏற்ற சமயம் இதுவே ஆம் எனத் துணிந்து திருமடத்தினின்றும் வெளியேறி இமயம் வரையுள்ள புண்ணிய தலங்களை தரிசித்து வருங்கால் சீகாளத்தி என்னும் திருப்பதியை அடைந்து அங்கு கோயில் கொண்டிருக்கும் காளத்தியப்பரை சேவித்து அங்கிருக்குங்கால் அப்பதியின் விசேஷத்தால் மனம் இயல்பாய் சாந்தியுற்றிருந்ததால் அம்மலையின் கண் தக்க ஓரிடத்தமர்ந்து 3 நாள் வரை கடும் தியான நிலையில் இருந்து கரும வசத்தால் விழிப்புற்று மலையினின்றும் இறங்கும் சமயம் பசி அதிகரிக்க காளத்திநாதனுடைய திருவருளால் ஆங்கு ஓர் வாழையிலையில் படைக்கப் பெற்றிருந்த அன்னத்தை அங்கெழுந்த அசரீரியால் அறிந்து உண்டு பசி தீர்ந்து கீழிறங்கி காளத்திநாதரை தரிசித்துவிட்டு ஞானசாதனத்திற்கு தகுதியுடைய ஒரு தனியிடத்தை நாடி யாத்திரையைத் தொடர்ந்தார்.

அக்கால் சேலம் அன்பர் நமசிவாய செட்டியாராலும் ஸ்ரீ காசிவாசி சிவானந்த சுவாமிகளாலும் தலமலை என்னும் தலம் தவம் புரிதற்கு தக்க இடமாம் எனக் கூறக்கேட்டு சேலம் நகரைச் சார்ந்த தலமலை என்னும் இடத்தைச் சார்ந்து அப்பதி தனிமைக்கு உகந்தது

---

"கேட்டால் கொடுக்கப்படுவது, தேடினால் அடையப்படுவது, தட்டினால் திறக்கப்படுவது, ஆகிய இவற்றைப் பெறுவதற்கு வழி ஆண்டவனின் தியானமே."

— ஸ்ரீசங்கரர்

எனத் தோன்றியதால் அம்மலையில் இயற்கையாக இருந்த குகை ஒன்றைத் திருத்தி அதை தவம் செய்தற்குரிய இடமாயமைத்து அத்வைதாசிரமமெனப் பெயரீந்து அதிலிருந்துகொண்டு தம்மை நாடிவரும் அன்பர்களுக்கு வேதாந்த சாஸ்திரங்களை போதித்தல் உபதேச மொழிகளைக் கூறல் ஆன்ம நிஷ்டையிலிருத்தல் முதலியவைகளைச் செய்து வருங்கால் மனத்தின் ஒடுக்கநிலை தொடர்ந்திருக்க வாக்கின் ஒடுக்கமும் தொடர்ந்திருக்க வேண்டுமென்றெண்ணி மூன்று மாத காலம் பூரண மௌனம் பூண்டு ஆன்மாவை இடையருது அநுசந்தித்து மேலாம் சமாதி நிலையை அடைந்தார்.

பிறகு முன்செய்துகொண்ட ஏற்பாட்டின்படி மூன்று மாதம் கடந்ததும், இரவில் தமது ஞானசாரியரின் திரு உருவத்தை வைத்து, அன்னருக்கு பூஜை செய்வதன் மூலம் மௌனத்தைக் கலைத்து உரையாடத் தொடங்கினர். ஆனல் தொண்டை அடைத்துக் கொண்டது. சப்தம் வெளிவரவில்லை. கண்ணீர் தாரை தாரையாய் ஒழுகிற்று. மீண்டும் பேச முயற்சித்தார். தொண்டை அடைத்துக் கொண்டது. பிறகு மிகுந்த பிரயாசைப் பட்டதால், சில வார்த்தைகள் கூற முடிந்தது.

அதுமுதற்கொண்டு மேற்கூறிய நிலை பல மாதங்கள் தொடர்ந்திருந்ததால் அன்பர்களுக்குப் பாடம் சொல்லுவதும் தடைபட்டிருந்தது. நாள் செல்லச் செல்ல அந்நிலை மாறி பாடம் கிரமமாக நடந்துவந்தது. அச்சமயத்தில் சச்சிதானந்த போதம் என்னும் நூல் ஒன்று சுவாமிகளால் எழுதப்பெற்று அச்சாகியும் உள்ளது. ஆனல் அத்வைத ஞானமிர்தம் என்ற பெயரில் எழுதிய நூல் அச்சாகாமல் இருக்கிறது.

---

*"தண்ணீர் இருந்தால்தான் தாமரை உயிர்வாழும். அதுபோல பரமன் கருணை இருந்தால்தான் நற்பலன் ஏற்படும்."*

*"விரும்பியார்க்கு விரும்பியதை யளிக்கும் கற்பக மரம், காமதேனு சிந்தாமணி போன்று அடியார்கள் கோருவதை அடையச் சாதகமாயுள்ளது ஆண்டவன் வழிபாடே."*

— ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்

பின் தலமலை அத்வைதாசிரமத்திலிருந்து நீங்கி சொர்ணபுரியை அடுத்துள்ள கோகுலத்தில் ஆசிரமம் அமைத்து அதிலிருந்து கொண்டு நீண்டநாள் அன்பர்கள் அனேகருக்கு வேதாந்த சாத்திரபாடம் போதித்ததுடன், சில அன்பர்களுக்கு வாசிட்ட பாடமும் கூறி சமாப்தி விழாவும் சிறப்போடு கொண்டாடப்பட்டது.

பின்பு அங்கிருந்து விலகி குமாரபாளையத்தருகில் காவிரி நதிக்கரையில் ஆனந்தாஸ்ரமம் என்ற பெயரில் ஆசிரமமொன்று அமைத்து அதில் ஆன்மானு சந்தானத்தில் நிலை பெற்றிருக்குங்கால் பிரார்த்தனை மாலை என்ற இந்நூலை இயற்றியருளியதோடு நாடி வருபவர்களுக்கு நல்லுரை வழங்கியும் வந்தார்கள்.

பின் சேலத்தை அடைந்து சங்கராசிரமத்தில் அடியவர் பலர்க்கும் அரிய சாஸ்திர அர்த்தங்களை எளிமையாய் விளக்கிக் கொண்டிருந்துவிட்டு ஜெய வருடம் வைகாசி மாதம் 7-ந் தேதி வியாழக்கிழமை அமரபட்சம், திரிதியை திதி, கேட்டை நட்சத்திரம் கூடின தினத்தில் பேரானந்த ஒளியில் இரண்டறக் கலந்தருளினர்.

ஓம் தத் சத்.

---

"மனிதனுடைய மனம், ஈசுவரனை தியானிக்கும் வரை உலகப் பற்றுக்களாகிய சமுத்திரத்தில் திசை தப்பிச் செல்லாது."

"பக்தியுடன் பகவன் நாமத்தைத் தியானி. அப்போது மலைபோலக் குவிந்திருக்கும் பாவங்கள், நெருப்புப் பொறி ஒன்றின்முன், பஞ்சுப் பொதிகள் எரிந்து சாம்பலாவது போல நசித்துப்போகும்."

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

பரப்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பிரார்த்தனை மாலை



1. உலகெல முணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

2. வானவரசமாந் தொடர்பினுலகோர்
வழுத்துறும் வன்னியைங்கரனை
வானவரதன மணியறுமுகனை மாசறு
கொற்றவாளிறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநற்றிருநெலை மாதை
வானவரதனு முத்திராமேச வள்ளலை வணங்கி
வாழ்த்திடுவாம்.

3. பொங்கருண் ஞானநங்கள் புண்ணியமனைத்து
மொன்றாய்
அங்கு புல்லென்ன வந்தாண்டருமறைப்
பொருளையார்க்கும்
அங்கையினெல்லிபோல வளித்தருளமலானந்த
சங்கர பகவத்பாதந் தாண்மலர் நந்தலைக்கே.

4. கலைநிறை கணபதி சரணம் சரணம்
கஜமுக குணபதி சரணம் சரணம்
தலைவனின்னிணையடி சரணம் சரணம்
சரவணபவகுக சரணம் சரணம்
சிலைமலை யுடையவ சரணம் சரணம்
சிவ சிவ சிவ சிவ சரணம் சரணம்

---

"ஒரு மனிதன் கடவுளை எவ்வளவுக்கெவ்வளவு அறிகிறானோ அவ்வளவுக்கவ்வளவு தன்னைப்பற்றிப் பெருமை பாராட்டிக் கொள்ள மாட்டான்."

— ஸ்ரீ சாரதா தேவியார்
(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திவ்விய பத்தினியார்)

உலைவரு மொரு பறை சரணம் சரணம்
உமை சிவை அம்பிகை சரணம் சரணம்
சரணம் சரணம் கிருஷ்ண சரணம்
சரணம் சரணம் கேசவ சரணம்
சரணம் சரணம் பரந்தாம சரணம்
சரணம் சரணம் பரமாத்ம சரணம்

5. பொன்னுலகத்தினிற் புவியிலந்தரத்து
என்னுடை யுட்புறத்து இலங்குகின்றது
மன்னு சிற்சோதியே வடிவம் யாவுமாய்த்
துன்னுவ தப்பொருள் தொழுதிறைஞ்சுவாம்.

6. சத்தியசிற் சுககனமாம் குருவே போற்றி
சலனமிலா சாந்தபர குருவே போற்றி
நித்திய நிர்க்குணமான குருவே போற்றி
நிரஞ்சனமாய் நின்றபர குருவே போற்றி
சுத்தபர வெளியான குருவே போற்றி
சூட்சுமமாய் நிறைந்தபர குருவே போற்றி
அத்துவித பூரணமாங் குருவே போற்றி
அகண்டமதாஞ் சற்குருவே போற்றி போற்றி.

7. சச்சிதானந்த சமரசவடிவாய்
அச்சம் நீங்கிய அடியவருளத்துள்
பொங்கித் ததும்பும் பூரண புராண னீ
கங்குல் பகலற்ற கருத்தில் நிலைத்தவ னீ
எல்லாம் அறிவாய் நீ யாவர்க்குந் தலைவ னீ
சர்வகாரணனு நீ சராசர நியந்தா நீ
சர்வாந்தர்யாமி நீ சராசர சக்தனு நீ
கற்றவருளத்தில் களித்திடும் கன்ன னீ
கல்லா தாருளத்தில் கரந்திடுங் கள்வ னீ
அகிலம் யாவையும் அளித்துக் காத்தழிப்பாய்
நிகில மாந்தரின் நின்மல பந்துவாம்

---

"இறைவன் திருவடித் தாமரைகளில் நீவிர் உங்கள் ஆன்மாக்களை ஒப்புவித்துவிடுக. அப்பொழுது வன்மையும், உதவியும், அடக்கமுடியா வல்லமையும் உங்களைத் தேடி வரும்."

— ஸ்ரீ சுவாமி விவேகானந்தர்

பகையுறவறியா பண்பனின் சொரூபம்
அகத்துணர்ந்துய்ய அடியனேற்கருள்வாய்
போகம் போக்தா போக்கியப் பொருளாய்
புணர்ந்து நின்றும் புணர்விலாச் சமமாய்
கருமம் கருத்தா காரிய வடிவாய்
கலந்து நின்றுங் கலப்பிலாப் பொருளே
ஞாதா ஞானம் ஞேயப் பொருளாய்
நாதா கலந்தும் நண்ணலாச் சுடரே
அன்பர் பகைவர் அனைத்துயிரிடத்தும்
அன்பாயமர்ந்த அருளுருக்கோலம்
அடியனேர்க்கனிசம் அளித்தருள் புரிவாய்
மிடியினர்காணு மின்புரைசோதி
போக்குவரவற்ற புண்ணியா வுனது
போக்கின் தன்மை புரிந்தவருளரோ
காமமாதியாம் கசடர்களுறவை
நாமத்தோடழிக்கும் நலனெனக்கருள்வாய்
கோசமென்னும் குத்திரப்பஞ்சவர்
பாசவலையில் பற்றற அருள்வாய்
சித்துநானென்ற சிறப்புடைப்புத்தி
நித்தமு நீங்காது நின்றிட அருள்வாய்
சடாசட உலகில் சார்ந்துளபோதம்
படாது நின்ற பான்மையைக் கண்டால்
சச்சிதானந்த சமரச ஞானம்
துச்ச ஆக்கையில் சுருதியநுசாரம்
இச்சை நீக்கினர் எய்திடலாகும்
அளவிலா அமுதாய் அளக்கருஞ் சோதியாய்
களங்கமில் இந்துவாய் காரிலாவானும்
மனத்திற்கோவிய மதத்தினர் பலர்க்கும்
அனந்த வடிவாய் அவரவர்க் கமர்ந்தும்
பற்றிலா அறிவாய் பராபர வடிவாய்
கற்றறிந்தவரது களங்கமில் உளத்தில்
உற்றெழுஞ்சோதி ஒப்பிலாச் சுகமே

---

"மனம் பரிபக்குவ நிலையை யடைவதற்கு மார்க்கம் தியானமே."

"ஒருவன் மனச் சாந்தியைப் பெற தியானம் அவசியம்."

— ஸ்ரீ ரமண மகரிஷிகள்

தேக நானென்னும் மோகம் ஒழிப்பாய்
மாயப்புலனைந்தும் ஒயுங்கதியுரைப்பாய்
திண்ணியமனதின் தீய எண்ணமும்
எண்ணிலா வேகமும் இசைந்திலா விகல்பமும்
நண்ணிப்பருத்து நாட்டங்கொண்டசைந்து
திரிந்துதிரிந்து தந்திடுஞ் சோகங்கள்
அளவிலையையனே அடியுடன்மாய்ப்பாய்
புலன்வழி எழுந்து பொய்யாம் பொருளில்
நலமிலா நிச்சய நாளுமியற்றிடும்
புத்திதன்னைப் புணர்விலா தொழிப்பாய்
சித்தம் என்னும் சீரிலாக் குப்பையில்
முட்டித்ததும்பும் மிருதியாம் நாற்றங்கள்
மட்டிலா தெழுந்து மயக்கிடா வண்ணம்
அத்தனே ஒழிப்பாய் அருளனே காப்பாய்
தானலாதொன்றைத் தானெனக்கருதும்
நானெனும் அகந்தை நாட்டியக்காரன்
தோற்றுவிக்கும் தொல்லைக்களவில்லை
அல்லும் பகலும் அகமொடுமமதையால்
புல்லுமானிடர்க்குப் பொருந்து மானத்தால்
மீண்டும் மீண்டும் பிறவியைத் தந்திடும்
ஈண்டு காரணம் இப்பேரகந்தை
இதனை மாய்ப்பாய் இணையிலா ஈச
மோகமே வடிவாய் மூடர்களிடத்தில்
அறியேனென்று அறிவாம் தன்னை
அறவுமயக்கும் அஞ்ஞானம் தன்னை
எஞ்ஞான்றும் வாராது மெய்ஞானத்தாலே
இஞ்ஞான்றழிப்பாய் ஈச என்னுயக
அரம்பையின் நாரென அனைத்துங்கழிந்தால்
நிரம்புமெய்யுணர்வு நானெனலாகும்
நானெனும் போத நழுவி நின்றிடம்
மோன பூரண மொழிய வியலாத

---

*"மனதில் தோன்றும் துன்பங்களை நீக்குவதற்கு கடவுள் அடிகளை வணங்குவதைத் தவிர வேறு வழியில்லை."*

*"எல்லா உலகங்களுக்கும் மேலாகிய முத்தியுலகத்தின் கண் அழிவின்றி வாழ்வதற்கு இறைவன் பாதங்களை இடைவிடாது துதிக்க வேண்டும்."*

— திருவள்ளுவர்

அகண் டானந்தம் அகத்தும் புறத்தும்
பொங்கித்ததும்பும் போக்கற நிற்கும்
இதுவே முடிநிலம் இதுவே துரியமாம்
இதுயோக முடிவும் இன்னிலை ஞானமாம்
சமாதி பெற்றோர் சகஜ நிலையுற்றோர்
ஏமாதி இறைவன் எழிலருள் பெற்றோர்
முத்தருமாவர் முனிவருமாவர்
பெத்தமுத்திகள் பேச்சளவாகும்
இகபரதுக்கம் இனியிலை இவர்க்கு
சர்வகாமாப்தி சார்ந்தவராகும்
கிருதகிருத்தியரும் கிளர்சாந்தமனத்தரும்
அடைந்ததின் அடைவை அடைவாகப் பெற்றோர்
தடையிலா ஆனந்தர் தண்ணருளுற்றோர்க்கு
சஞ்சிதமெல்லாம் பஞ்சுபோல்போயின
எஞ்சியகருமம் இனிநுகர்ந்தொழியும்
நடக்குங்கருமம் நட்டமாம் இப்போதே
திடவநுபூதி திருக்கிலிருத்தலால்
பிராரத்தகருமம் பாதியாதவரை
கருமம்முடிந்தால் கடையுடல் வீழ்ந்திடும்
தூலம் விழுந்தால் துரியமாய் விண்ணாய்
மூலமுதற்பொருளாய் முடிவிலானந்தமாய்
நித்தியநிர்க்குண நிராலம்ப நிர்வசன
நிஷ்கள நிராமய நிரவயவ சொரூபமாய்
என்றும் பிறவாத இன்னிலை எய்துவர்
சென்ற ஜனனத்தில் செய்துளதவத்தவர்
காரணகாரியங் கடந்து நின்னருளால்
ஆரணமுடிவை அடைந்திடலாகும்
அணுவினும் அணுவாய் மகத்தினும் மகத்தாய்
கணிப்பிலா வன்பாய் கருணைவாரிதியாய்
காலமூன்றினும் கலப்பிலாகரியாய்
சீலத்தவரின் சித்தத்துட்டேனாய்
சாலவிளங்கும் சனாதனநினது
பூரண அருளை புனிதனுன்மறவேன்
ஆதலால் அடியனின் அகண்ட சொரூபத்தில்
நாதனேகலந்திட நயந்தருளாயே

---

''தெய்வம் ஒருவனே என உணர வல்லீரேல்
அருவினைகள் ஐந்தும் அறும்'' — ஔவையார்

8. அத்துவிதசமரச ஆனந்தபோதமாய்
அருளொடு நிறைந்த நினது
அட்டமாசித்திகளும் அகமமதையற்றவர்
அநுபவத்திருந்து காண்பர்
அத்துவிதங்காணுத அறிவிலாபேதர் சிலர்
அறிவுநிலே அநந்தமென்பர்
அகங்குழைந்துருகியே அகத்திற்சமாதியுற்ருேர்
அறிவுநிலே ஏகமென்பர்
இத்துவிதமயக்கினில் யாதொன்றும் வேண்டிலேன்
யாது நின்னருளென்னவே
என்றென்றுமறவாது இறப்பிலாவானந்தம்
இதயத்துணர்ந்து நின்று
சத்துசித்தானந்த சமரசபோதமாய்
சாக்கியம் நீங்கிநின்ற
சாசுவதமுத்திநிலே தமியனேற்கீந்தருள்
தண்ணருள் நிறைந்தவடிவே

9. பற்றற்று மோகம்விட்டானந்த முத்திநிலே
பாரினிலடைந்த பெரியோர்
பந்தமுடை மனிதரோடகம்புக் கிருப்பினும்
பக்தருட னுறவாடினும்
கற்றமெய்க்கலேயினர் காதலில் துறவினர்
கடுவனம்புகுந்த யோகியர்
கண்டவிப்பான்மையினர் கழகத்துறைந்திடினும்
காய்தலுடன் கனிதல் காணுர்
சற்றுநிலேயில்லாத சகத்திற்குச்சாக்ஷியாய்
தன்னேயே யினிதுகாண்பர்
சாத்துவித ராசதந் தாமதமெனுமூன்றின்
தகுசாந்த கோரமூடம்
சுற்றுமன பரிணுமஞ்சோதிக்கில் நாமல்ல
சுகமே நமக்கு வடிவாம்
சுருதிநிலேயிதுவாகும் யூகத்திற்கொத்ததிது
சுவாநுபவர் சம்மதமுமே

---

"கடவுளிடத்தில் தங்கள் மனத்தை எப்போதும் செலுத்தும் பெரியோர்கள் தங்களுக்கு வரும் எவ்விதத் துன்பங்களுக்கும் அஞ்சமாட்டார்கள்."

— சிவப்பிரகாசர்

10. ஆசையெனும்பேய்பிடித் தலக்கணுறத்தள்ளு
அசையாத மாந்தர் யாரே [மெனின்
ஆதலால் ஆசைவிட்டகன்ற வர்களகிலத்தில்
அரிதாகு மென்னலாகும்
நீசமனம் ஆசையால் பிணிப்புற் றலையுமெனின்
நிட்டைக்கு வெகு தூரமாம்
நிலையான பேரின்பம் நித்தமும் வேண்டினோர்
நிராசையைக் கைக்கொண்டனர்
பாசங்கள் துறவாத வேடங்கள் பகட்டாகும்
பாபமே வடிவமாகும்
பரமான நின்னருள் பருகிநின் றவர்க்கன்றோ
பகைபாசமென விளங்கும்
ஆசையே பந்தமும் ஆசையே ஜனனமும்
ஆசையே அகிலதுக்கம்
ஆசைவிடில் சாந்தமாம் ஆசைவிடில்
ஆசைவிடில் ஆனந்தமாம் [மோக்ஷமாம்

11. ஆற்றொணுத் துயருற்றும் அகிலப்பிரபஞ்சத்தில்
அலையுமனம் அடங்கவில்லை
ஆசிரியன் போதித்த ஆரண அர்த்தத்தில்
அன்பொடு நிலைக்கவில்லை
தோற்றசை முதலான தூலமுதல் உடல் மூன்றும்
துக்கமே வடிவமென்று
தொன்மையோர் போதித்தவகையிலே
துட்டமனம் விட்டதில்லை [போதித்தும்
சாற்றிடும் பொய்யான சத்தாதி விடயங்கள்
சார்ந்த போதினிதாகிபின்
சமஸ்கார வடிவாகி சாந்தமாம் ஆன்மாவில்
சார்ந்திட விரோதியாகும்

---

"ஒருவன் பிரார்த்தனை செய்வதில் அவனுக்காக மட்டும் செய்வது சரியல்ல. இந்த உலகமெலாம் வாழும்படி பிரார்த்தனை செய்தல் வேண்டும். அப்படிச் செய்வதால் ஒருவனுக்கு வேண்டிய எல்லாம் அடங்கி விடுகின்றன."

— ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்




மாற்றெணுத் துயர்தந்து மலத்திலாழ்த் தழுந்திடும்
 மனக்குரங் கொழிய வருள்வாய்
மாசற்ற உள்ளத்தில் மறைபுகலுந் துரியமாய்
 மகிழ்போத தேவதருவே

12. நீரினிற்குமிழியென நிலையிலாக் காயத்தை
 நிலையென்று கருதி மனமும்
நில்லாது திரிந்தலைந் தலுத்துமோர் சுகமில்லை
 நிமிடத்திற் கனந்ததுக்கம்
பூரித்த ஆன்மாவில் பொதிந்துநிலை நிற்குமெனில்
 போக்கு வரவற்ற சுகமாம்
புத்தமிர்தபோகமும் பொய்யென்ற முத்தர்க்கு
 போகத்தில் ஆசையில்லை
பாரினில் சித்தாதி யோகியர் தியாகியர்
 பரமான பக்தர் யார்க்கும்
பந்தமகல் ஞானமே மோக்ஷத்திற்கேதுவாம்
 பார்க்கில் நெறிவேறில்லையாம்
சீரருள் நிறைந்தகுண செல்வமே செழித்தோங்கும்
 செஞ்சுடர்ச் சுகபோதமே
செய்யநின் திருவருள் சிறியனேற்களித்தருள்
 சிற்சுகன அமலசுகமே

## குருஸ்துதி

13. திருநான்மறை ஓதிய திருவுருவம்
 அருளால்வந்தென தகத்திருளை
 கருவோடகற்றிய கதிர்ப்பதியே
 திருசங்கரதேசிக குருசரணம்

---

"இவ்வுலகில் மானிடர் நினைக்கக்கூடியதைவிட மிகவும் கடினமான காரியங்களையும் பிரார்த்தனையின் சக்தியினால் சாதிக்க முடியும். கடவுளின் மகிமையை அறிந்தும், அவனைக் கைகூப்பித் தொழாவிடின், பகுத்தறிவில்லாத விலங்குகளுக்கும், பகுத்தறிவுடைய மக்களுக்கும் என்னே வித்தியாசம்!".

— டெனிஸன் (ஓர் ஆங்கிலக் கவி)

14. பவ்வார்கடல் பட்டுழல் மானிடரை
அவமேகழியா தகற்றிடுமன்புருமா
தவமேவடிவான தனிப்பரமே
கவர்பேதமகற்றிடு தேசிக குருசரணம்

15. சற்றும்நிலையில்லா சகத்திரளின்
பற்றற்றொளிர்நின் பங்கஜபாதமலர்
அற்பற்கெளிதாமோ அருமாமறைசீர்
தற்பதமாம் பொருள் தேசிக குருசரணம்

16. பல்லாயிரமாம்பல மந்திரம்யாவினுக்
கெல்லாம்பொருள் ஒன்றென ஓதியநின்
சொல்லாஞ்சுவை சுத்தற்காவனபோல்
நல்லா அருள்நண்ணிடு தேசிக குருசரணம்

17. உம்பற்கரிதாகிய உயர்மாமதிசீர்
அம்பொற் பொருள் அடைதற்கரிதெனினும்
இம்பர்க்கெளிதாக அளித்திடுநின்
செம்பொன்மலர் தந்திடு தேசிக குருசரணம்

18. பணியாதமனக் குரங்கைப் பணிய
பிணியாகியவாதனை பெயர்ந்தொழிய
கணியாத குணங்களுக் கதிபதியே
தணியா அருள் தந்திடு தேசிக குருசரணம்

19. மனமற்றொளிர் மாபெரு நன்னிதியை
சினமற்றவர் சேர்ந்திடும் சுகமதியை
இனமற்றவர் எய்திடும் இருநிதியை
தினமுற்றிடதந்தருள் தேசிக குருசரணம்

20. அகநீங்கிய அன்பரகத்தொளிரும்
அகமாகிய ஆனந்த மெய்ப்பொருளாய்
நிகமம்பல ஓதிடு நிஜவடிவாஞ்
சுகமேதது தந்திடு தேசிக குருசரணம்

---

*"சமய சாந்தியும் கல்வியிற் சுவையும் பெற எக்காலமும் துணையாக நிற்பது இறைவனின் தியானமே."*

— ஹெர்ஷல் (ஓர் ஆங்கில விஞ்ஞானி)

## நாமாவளி.

21. ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச
பாஹிமாம்
ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச
ரக்ஷமாம்
ஜெயகணேச பாஹிமாம் ஜெயகணேச ரக்ஷமாம்
ஜெயகணேச பாஹிமாம் ஜெயகணேச ரக்ஷமாம்
ஜெயகணேச ஜெயகணேச ஜெய்கணேச
பாஹிமாம்
ஜெயகணேச ஜெயகணேச ஜெயகணேச
ரக்ஷமாம்.

22. ஓம் நம: சிவாய சிவாயநம: ஓம்
ஓம் நம: சிவாய சிவாயநம: ஓம்
சிவாயநம: ஓம் சிவாயநம: ஓம்
சிவாயநம: ஓம் சிவாயநம: ஓம்
சிவாயநம: ஓம்நம: சிவாய
சிவாயநம: ஓம்நம: சிவாய
ஓம் நம: சிவாய சிவாயநம: ஓம்
ஓம் நம: சிவாய சிவாயநம: ஓம்
ஓம் நம: சிவாய ஓம்நம: சிவாய ஓம்நம: சிவாய
[சிவாய நம: ஓம்
ஓம் நம: சிவாய ஓம்நம: சிவாய ஓம்நம: சிவாய
[சிவாய நம: ஓம்

23. சிவாய நம: ஓம் சிவாயநம: ஓம்
சிவாய நம: ஓம் சிவாயநம: ஓம்
சிவாய நம: ஓம் நம: சிவாய
சிவாய நம: ஓம் நம: சிவாய [ஓம் நம: சிவாய]

---

"வெற்றியும் தோல்வியும் வாழ்க்கையின் விளையாட்டு, வாழ்க்கையின் மாயை."

— தாகூர்

24. ஓம் நம: சிவாய சிவாய நம: ஓம்
ஓம் நம: சிவாய சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் நம: சிவாய
சிவாய நம: ஓம் நம: சிவாய [ஓம் நம:]

25. சிவ சிவ சிவ சிவ சிவாய நம: ஓம்
சிவ சிவ சிவ சிவ சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் சிவாய நம: ஓம்
சிவாய நம: ஓம் நம: சிவாய
சிவாய நம: ஓம் நம: சிவாய [சிவ சிவ]

26. சம்போ சங்கர கௌரீச சாம்பசதாசிவ கௌரீச
சம்போ சங்கர கௌரீச சாம்பசதாசிவ கௌரீச
சாம்பசதாசிவ கௌரீச சாம்பசதாசிவ கௌரீச
சாம்பசதாசிவ கௌரீச சாம்பசதாசிவ கௌரீச
சாம்பசதாசிவ கௌரீச சம்போ சங்கர கௌரீச
சாம்பசதாசிவ கௌரீச சம்போ சங்கர கௌரீச
[சம்போ]

27. ஜெயசம்போ ஜெயசம்போ சிவ
கௌரிசங்கர ஜெயசம்போ ஜெய

ருத்ரம்பசுபதி மீசானம்
கலியேகாசி புரிநாதம் ஜெயசம்போ

ஹரசிவசங்கர கௌரீசம்
வந்தேகங்கா தரமீசம் ஜெயசம்போ

28. சிவசிவ சண்முகா
சரவணபவ ஓம்
சிவசிவ சண்முக
சரவணபவ ஓம்

---

''செல்வம் என்பது சிந்தனையின் நிறைவு.''

— குமரகுருபரர்

சிவசிவசண்முக
சரவணபவ ஓம்

சிவசிவ சண்முக
சரவணபவ ஓம்
சரவணபவ ஓம் சரவணபவ ஓம்
சரவணபவ ஓம் சரவணபவ ஓம்
சரவணபவ ஓம் சரவணபவ ஓம்
[சிவசிவ ஷண்முகா

29. ஓம் நமோ நாராயண ஓம் நமோ நாராயண ஓம்
நமோ நாராயண நாராயண ஸ்ரீமந்
ஓம் நமோ நாராயண ஓம் நமோ நாராயண ஓம்
நமோ நாராயண நாராயண ஸ்ரீமந்
நாராயண ஸ்ரீமந் நாராயண ஸ்ரீமந்
நாராயண ஸ்ரீமந் நாராயண ஸ்ரீமந்
நாராயண ஸ்ரீமந் நாராயண ஸ்ரீமந்
நாராயண ஸ்ரீமந் நாராயண ஸ்ரீமந்
[ஓம் நமோ]

30. ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே
ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே
ஹரேகிருஷ்ண ஹரேகிருஷ்ண கிருஷ்ண
கிருஷ்ண ஹரே ஹரே
ஹரேகிருஷ்ண ஹரேகிருஷ்ண கிருஷ்ண
கிருஷ்ண ஹரே ஹரே

31. முகுந்தமுராரே ஸ்ரீரகுபதி ஹரே
முகுந்தமுராரே ஸ்ரீரகுபதி ஹரே
ஸ்ரீரகுபதி ஹரே ஸ்ரீராமசந்த்ர ஹரே
ஸ்ரீரகுபதி ஹரே ஸ்ரீராமசந்த்ர ஹரே
ஸ்ரீராமசந்த்ர ஹரே ஸ்ரீராகவ ஹரே
ஸ்ரீராமசந்த்ர ஹரே ஸ்ரீராகவ ஹரே
[முகுந்தமுராரே]

---

“கடவுளை மனதில் எப்பொழுதும் வைத்துப் பிறருக்கு உபகாரமாக வாழ். உனக்கு இன்பம் தருவதும், மனதில் அமைதியுண்டாக்குவம் இது ஒன்றே.”

— ராஜாஜி

32. ஓம் நமோ பகவதே வாசுதேவாய
ஓம் நமோ பகவதே கிருஷ்ணதேவாய

சங்குசக்ர பீதாம்பரதாரி
கருணாஸாகர கிருஷ்ணமுராரி

நந்த நந்த கோவிந்த முராரி
கிருஷ்ண கோவர்த்தனதாரி [சங்குசக்ர]

33. ஓம்குருநாதா சற்குருநாதா ஓம்குருநாத
ஜெயகுருநாதா
ஓம்குருநாத சற்குருநாதா சச்சிதானந்தகுரு
சச்சிதானந்த
சமரஸஞானகுரு சச்சிதானந்த சரணம் சரணம்
சற்குருநாதா
ஓம்குருநாதா சற்குருநாதா

34. சுத்த சோதி சொரூப சுகத்தினை
பக்த ருய்யப் பரிந்தருள் தேவனை
நித்த நிர்க்குண நிமலமா தேவனை
நித்த மேத்தி நினைந்து வணங்குவாம்

35. போத நாயகனாகிய பொதுநடத்தரசை
வீதராக விரத்தரின் றலைவனும் வீரனை
சீத தண்மலரென் சிரத்தினில் சேர்த்த
மாதேவனை
மாதவத்துறு மாண்பெலாம் படிந்திடப் பணிவாம்

36. ஆதரத்துட னனுதினம்பணி யன்பரோடுறை
சாந்தனும்
காதலற்றவர் காதுதொல்வினை கழிய நோக்கிடு
போதனும்
மாதவத்தினர் மாண்பினலுரு மறையவந்த
மாதேவனை
சீதமுத்தி சுகத்தினைப்பெற சிந்தையிற்
றினமேத்துவாம்

---

"உண்டாரை மட்டும் மயக்கும் கள்(மது)
கண்டாரையும் மயக்கும் காமம்."

-- விவேகி

37. தந்தை தாய் ஆவானும் சார்கதி யிங்காவானும்
அந்தமிலா இன்ப நமக்காவானும் — எந்தமுயிர்
தானுகுவானும் சரணுகுவானும் அருட்
கோனுகுவானும் குரு.

38. அண்டமெங்கும் நிறைந்தருள் பொங்கினேய்
மங்களம் ஜெயமங்களம்
பண்டு நின்றவெம் பாசமறுத்திட்டோய்
மங்களம் ஜெயமங்களம்
கன்று மூவகைக்கார் மயல் நீங்கினேய்
மங்களம் ஜெயமங்களம்
இன்று மெங்கள் இடரறுத் தாண்டவா
மங்களம் ஜெயமங்களம்
சொல்லும் பெயரொடு தோன்றும் பொருள்
பெற்றேய்
மங்களம் ஜெயமங்களம்
நல்லுலகம் புகழ்நாத மாதேவனே
மங்களம் ஜெயமங்களம்

39. கரசரணக்ருதம் வாக்காயஜம் கர்மஜம்வா
ஸ்ரவண நயனஜம்வா மானஸம்வா அபராதம்
விஹிதம் அவிஹிதம்வா சர்வமேதத் க்ஷமஸ்வ
ஜய ஜய கருணப்தே ஸ்ரீ மஹாதேவசம்போ.

40. சைதன்யம் சாஸ்வதம் சாந்தம் வ்யோமாதீதம்
நிரஞ்சனம்
நாதபிந்து கலாதீதம் தஸ்மை ஸ்ரீ குரவே நம:

41. நிர்குணம் நிர்மலம் சாந்தம் ஜங்கமம்
ஸ்திரமேவச
வ்யாப்தம்யேன ஜகத்சர்வம் தஸ்மை
ஸ்ரீ குரவே நம:

---

*“நின்மையைப்பேணி வளர்க்கும் செயலைவிடத்
தீமையை தடுத்துக் காக்கும் செயலே மேலானது.”*

— பேரின்பச்சோலை

42. தொம்பிதா தொம்சமே மாதா தொம்பந்து:
தொம்ச தேவதா
சம்சாரப்ரீதி பங்காய தஸ்மை ஸ்ரீ குரவே நம:

43. ஓம் நமோ ப்ரஹ்மாதிப்யோ ப்ரஹ்மவித்யா
சம்பிரதாய
கர்த்திருப்யோ வம்சரிஷிப்யோ மஹத்ப்யோ
நமோகுருப்ய:
சர்வோபப்லவரஹித: ப்ரக்ஞானகன:
ப்ரத்யகர்த்தோப்ரஹ்மை வாஹமஸ்மி.

44. ஓம் நாராயணம் பத்மபவம் வசிஷ்டம்
சக்திம்ச தத்புத்ர
பராசரம்ச வ்யாசம் சுகம் கௌடபதம் மஹாந்தம்
கோவிந்த யோகீந்த்ர மதாஸ்ய சிஷ்யம்.

45. ஸ்ரீ சங்கராசார்ய மதாஸ்ய பத்மபாதஞ்ச
ஹஸ்தாமல
கஞ்சசிஷ்யம், தம்த்ரோடகம் வார்த்திக
காரமன்யான்
அஸ்மத்குருன் சந்ததமான தோஸ்மி.

46. சுருதி ஸ்மிருதி புராணாம் ஆலயம் கருணாலயம்
நமாமிபகவத்பாதம் சங்கரம் லோக சங்கரம்.

47. சங்கரம் சங்கராசார்யம் கேசவம் பாதராயணம்
சூத்ரபாஷ்யக்ருதௌ வந்தேபகவந்தௌ
புன: புன:

48. ஈஸ்வரோ குருராத்மேதி மூர்த்தபேத விபாகினே
வ்யோமவத் வ்யாப்ததேஹாய
தக்ஷிணாமூர்த்தயே நம:

---

"நீ எப்பொழுதும் கடவுள் திருவருளையே துணையாகப் பற்று. இது உனக்கு மெய்த் தளர்ச்சி வரும் போது பலத்தைக் கொடுக்கும்; மனத்தில் துயரமாகிய இருள் நிரம்பிய காலத்தில் ஒளியைக் கொடுக்கும்."

— ஷில்லர் (ஓர் ஜெர்மன் கவி)

# நிர்குணாஷ்டோத்திர சத நாமாவளி.

1 ஓம் அகண்டாய நம:
2 ,, அகர்த்ரே ,,
3 ,, அகாமாய ,,
4 ,, அகாரணாய ,,
5 ,, அஹேயாய ,,
6 ,, அக்ரோதாய ,,
7 ,, அஸங்காய ,,
8 ,, அஸம்ஸாரிணே ,,
9 ,, அசரீரிணே ,,
10 ,, அசலாய ,,
11 ,, அச்யுதாய ,,
12 ,, அக்ஷராய ,,
13 ,, அணவே ,,
14 ,, அத்வைதாய ,,
15 ,, அநந்தாய ,,
16 ,, அநாதயே ,,
17 ,, அநாதிமுக்தாய ,,
18 ,, அநாவ்ருதாய ,,
19 ,, அநுபாதேயாய ,,
20 ,, அநூதநாய ,,
21 ,, அநேகரூபாய ,,
22 ,, அபயாய ,,
23 ,, அபரிச்சிந்நாய ,,
24 ,, அபரோக்ஷாய ,,
25 ,, அபேதாய ,,
26 ,, அபோக்த்ரே ,,
27 ,, அப்ரமேயாய ,,
28 ,, அப்ரவ்ருத்தாய ,,
29 ,, அப்ராணாய ,,
30 ,, அமநஸே ,,
31 ,, அமிர்தாய ,,
32 ,, அலோபாய ,,
33 ,, அவ்யாகிருதாய ,,
34 ,, ஆதயே ,,
35 ஓம் ஆத்மநே நம:
36 ,, ஆநந்தரூபாய ,,
37 ,, உன்னதாய ,,
38 ,, ஏகரூபாய ,,
39 ,, காரணாய ,,
40 ,, கூடஸ்தாய ,,
41 ,, ஸத்யாய ,,
42 ,, ஸத்ரூபாய ,,
43 ,, சம்பவே ,,
44 ,, ஸர்வகாரணாய ,,
45 ,, சர்வகதாய ,,
46 ,, ஸர்வஸமாய ,,
47 ,, ஸர்வக்ஞாய ,,
48 ,, ஸர்வதோமுகாய ,,
49 ,, ஸர்வாகாராய ,,
50 ,, ஸர்வாதாராய ,,
51 ,, ஸர்வாதிஷ்டாநாய
52 ,, ஸர்வாத்மநே ,,
53 ,, ஸர்வாபாவாய ,,
54 ,, ஸாக்ஷிணே ,,
55 ,, சாந்தாய ,,
56 ,, சிந்மாத்ராய ,,
57 ,, சிவாய ,,
58 ,, சுத்தாய ,,
59 ,, ஸ்வப்ரகாசாய ,,
60 ,, ஸ்வயம்ப்ரகாசாய ,,
61 ,, ஸ்வயாய ,,
62 ,, சூந்யாய ,,
63 ,, க்ஷேத்ரக்ஞாய ,,
64 ,, ஞாநஸ்வரூபாய ,,
65 ,, ஸ்தாணவே ,,
66 ,, த்ருக்ஸ்வரூபாய ,,
67 ,, நாநாரூபாய ,,
68 ,, நிஷ்கிரியாய ,,

---

"இளகி உருகும் மனத்தினையுடைய மனிதர்களின் உள்ளத்தை திருடுகிறவனாதலால்தான் கண்ணனுக்கு வெண்ணையின்மேல் அதிகப் பிரியம் உண்டாயிற்று."

69 ஓம் நிஷ்ப்ரகிருதயே நம:
70 ,, நிஷ்ப்ரபஞ்சாய ,,
71 ,, நித்யமுக்தாய ,,
72 ,, நித்யாநந்தாய ,,
73 ,, நித்யாய ,,
74 ,, நிரஞ்ஜநாய ,,
75 ,, நிரவயவாய ,,
76 ,, நிராகாராய ,,
77 ,, நிராதாராய ,,
78 ,, நிரிந்திரியாய ,,
79 ,, நிரீசுவராய ,,
80 ,, நிருபத்ரவாய ,,
81 ,, நிருபாய ,,
82 ,, நிர்க்குணாய ,,
83 ,, நிஸ்ஸம்பந்தாய ,,
84 ,, நிர்ஜீவாய ,,
85 ,, நிர்தோஷாய ,,
86 ,, நிர்ப்பெத்தாய ,,
87 ,, நிர்மலாய ,,
88 ,, நிர்லேபாய ,,
89 ,, நிர்விகல்பாய ,,
90 ஓம் நிர்விகாரிணே நம:
91 ,, நிர்விசேஷாய ,,
92 ,, நிர்விஷயாய ,,
93 ,, நிர்விர்தாய ,,
94 ,, பரமாநந்தாய ,,
95 ,, பரமார்த்தாய ,,
96 ,, பரிபூர்ணாய ,,
97 ,, ப்ரத்யக்ஸ்வரூபாய ,,
98 ,, பிரத்யக்ஷாய ,,
99 ,, ப்ரஹ்மணே ,,
100 ,, புத்தாய ,,
101 ,, புராதநாய ,,
102 ,, மஹதே ,,
103 ,, மஹாசூந்யாய ,,
104 ,, மநோவாசாமகோசராய ,,
105 ,, முத்தாய ,,
106 ,, யதார்த்தவஸ்துநே
107 ,, வஸ்துநே ,,
108 ,, விபவே ,,

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த அத்வைத ஜோதி

ஸ்வரூப ஸ்ரீ...தேசிக ஸ்வாமிநே நமோ நம:

நாநாவித மந்திர / பரிமளபத்திர புஷ்பாணி சமர்ப்பயாமி.

"எல்லாம் ஆண்டவனுடைய செயலே. எப்பொழுது எல்லாவற்றையும் விட்டு அவனுடைய திருவடிகளே கதியென்று பற்றினாயோ அப்பொழுதே நீ சரியான வழியிற் சென்றாய்."

---

"எவன் பாவத்தொழிலைச் செய்தாலும் அதற்கு அஞ்சிப் பிரார்த்தனை செய்கின்றானோ அவனே கடவுளை நெருங்குகிறான். பாவியானாலும் பிரார்த்தனை செய்வானாகில் அவனே சாதகர்களுள் பெருமையுள்ளவனாவான்."

— ஓர் இஸ்லாமியப் பெரியார்




# பக்திப் பாடல்கள்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியையுன் நாடு.

வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்
வீணை செய்யும் ஒலியி லிருப்பாள்
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ளதாம் பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தி னுள்நின் ருெளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள். (வெள்ளைத்)

— (பாரதியார்)

அஞ்சிலே ஒன்றுபெற்ருன் அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்ருருக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்றுபெற்ற அணங்கைக் கண்டயலாரூரில்
அஞ்சிலே ஒன்றைவைத்தான் அவனெம்மை
அளித்துக் காப்பான்

— (கம்பர்)

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சன்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே "ராம" என்றிரண்டெழுத்திருல்

— (கம்பர்)

---

"எண்ணெய் இல்லாது போனுல் விளக்கு எரியாது. அதுபோல ஈசுவரனில்லாமற் போனுல் மனிதன் ஜீவித்திருக்க முடியாது."

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

கண்ணன் கழலினை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே

— (திருவாய்மொழி)

அன்பே தகழியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா — நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்.

— (பூதத்தாழ்வார்)

உளன்கண்டாய் நன் நெஞ்சே உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார் உளத்து உளன் கண்டாய்
வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான் என்று ஓர்.

— (பொய்கையாழ்வார்)

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன்னாணும் தோன்றுமால் — சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து.

— (பேயாழ்வார்)

பொன்னைக்கொண்டு உரைகல்மீதே நிறமெழ
உரைத்தாற்போல்
உன்னைக்கொண்டு என்நா அகம்பால் மாற்றின்றி
உரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண்டு என்னுள்வைத்தேன் என்னையும்
உன்னில் இட்டேன்
என்அப்பா ! என் இருடிகேசா ! என் உயிர்க்காவலனே.

— (பெரியாழ்வார்)

---

"ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்,
ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்."

நீயே உலகெலாம் நின்னருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும் — நீயே
எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து
இரு சுடருமாய இவை.

— (நம்மாழ்வார்)

மனத்திலோர் தூய்மையில்லை வாயிலோர் இன்சொல்
இல்லை
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன் வாளா
புனத்துழாய் மாலையானே பொன்னிசூழ் திருவரங்கா !
எனக்கினி கதிஎன் ? சொல்லாய் என்னை ஆளுடைய
கோவே.

— (தொண்டரடிப்பொடியாழ்வார்)

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

— (குலசேகராழ்வார்)

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயின
எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும் அருளொடு
பெருநிலமளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும் ஆயின
செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

— (திருமங்கையாழ்வார்)

---

"பக்தி பண்ணும்போது அதைப் பரிகாசம் பண்ணு வோரையும், பக்தியையும் பக்தர்களையும் ஏளனம் செய் வோரையும் விட்டு விலகியிரு."

— ஸ்ரீராமகிருஷ்ணர்

கற்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விரும்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே.

— (ஸ்ரீ ஆண்டாள்)

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுர்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெரிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே.

— (திருமூலர்)

சிவசிவ் என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

— (திருமூலர்)

முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய் தன்மணாளனோ டாடிய
சுகத்தை சொல்லென்ருல் சொல்லுமாறெங்ஙனே

— (திருமந்திரம்)

இன்றைக்கோ நாளைக்கோ இன்னுமரை நாழிகைக்கோ
என்றைக்கோ ஆவியிழப்பென்று – சென்றிறைஞ்சி
ஆசாரியனுக் கனுகூல சித்தனாய்
பாசாரியைக் கழன்று பார்.

— (வள்ளலார்)

---

"பக்தன் தான் செய்யும் பக்தி ஸாதனைகளை எவ்வளவுக் கெவ்வளவு பிறர் அறியாமல் செய்துக் கொள்ளக் கூடுமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது."

— ஸ்ரீராமகிருஷ்ணர்

சென்றது காலம் சிதைந்ததிளமை நலம்
நின்றது சாவென்று நினைந்துருகி – மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமம் எண்ணு மாந்தர்
படிக்கின்ற நூல் எல்லாம் பாழ்.

— (அதிவீரராம பாண்டியர்)

தேளது தீயில் வீழ்ந்தால் செத்திடா தெடுத்தபேரை
மீளவே கொடுக்கினலே வெய்யுரக் கொட்டலேபோல்
ஏளனம் பேசித் தீங்குற்றிருப்பதை எதிர்கண்டாலும்
கோளினர் தமக்கு நன்மை செய்வது குற்றமாமே.

— (விவேக சிந்தாமணி)

## (தட்சிணமூர்த்தி வணக்கம்)

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து
காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்து
பவத் தொடக்கை வெல்வாம்

— (திருவிளையாடல்)

தோடுடைய செவியன் விடையேறியோர்
தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங்கவர்
கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள் செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

— (திருஞானசம்பந்தர்)

---

"சர்க்கரையையும் மணலையும் கலந்து வைத்தால் எறும்பு மணலைத் தள்ளிவிட்டுச் சர்க்கரையை மட்டும் இழுத்துச் செல்கிறது. அதுபோல பரமஹம்சர்களும் தீயோரை விட்டு நல்லோரைப் பொறுக்கி எடுத்துவிடுகின்றனர்."

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாத னும நமச்சி வாயவே.

— (திருஞான சம்பந்தர்)

மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப் பாதமே மனம்
பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேன் இனிப்பிறவாத தன்மை
வந்தெய்தினேன்
கற்றவர் தொழுதேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக்
கொடுமுடி
நற்றவாவுனை நான் மறக்கினும் சொல்லு நா
நமச்சிவாயவே.

— (சுந்தரர்)

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணை தென் பால் வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி அல்லேனென லாமே.

— (சுந்தரர்)

விறகிற் றீயினன் பாலிற் படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல்
முருக வாங்கிக்கடைய முன் நிற்குமே.

— (அப்பர்)

---

*''வெள்ளைத் துணியில் ஒரு சிறு கரைப்பட்டாலும் அவ் வழுக்கு பிரபலமாய்த் தோன்றும். அதுபோல, சான்றோரிடத் தில் காணப்படும் அற்பக் குற்றமும் வெளிப்படையாகத் தோன்றும்.''*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

படைக்கலமாகஉன் நாமத் தெழுத்தஞ்சென் நாவிற்
கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்காட்
செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித்தூ
நீறணிந்துன்
அடைக்கலங் கண்டாய் அணிதில்லை சிற்றம்
பலத்தரனே

— (அப்பர்)

வேற்ருகி விண்ணுகி நின்ருய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்ருகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்ருகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானுய் போற்றி
காற்ருகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலைமலையானே போற்றி போற்றி.

— (அப்பர்)

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே?
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே?
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே?
உருக்குவித்தால் ஆரொருவர் உருகா தாரே?
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே?
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே?
காட்டுவித்தால் ஆரொருவர் காணு தாரே?
காண்பாரார்? கண்ணுதலாய்க் காட்டாக் காலே!

— (அப்பர்)

---

"உனக்கு ஈசுவர தரிசனத்தில் விருப்பமிருந்தால் ஹரி நாமோச்சாரண பலனில் திடமான நம்பிக்கைகொள். நித்யம் எது, அநித்யம் எது என்பதைப் பகுத்தறிய முயற்சி செய்."

— ஸ்ரீராமகிருஷ்ணர்

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்
மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்! இவ்வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்செய் பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடைமேல் வைத்த
தீவண்ணனே.

— (அப்பர்)

யானேபொய் என்நெஞ்சும்பொய் என் அன்பும்பொய்
ஆனுல்வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருவாய் அடியேன் உனைவந்து உறுமாறே.

— (மாணிக்கவாசகர்)

வேண்டத்தக்கது அறிவோய்நீ வேண்டமுழுதும்
தருவோய்நீ
வேண்டும்அயன் மாற்கு அறியோய்நீ வேண்டி
என்னைப் பணி கொண்டாய்
வேண்டிநீ யாது அருள் செய்தாய் யானும் அதுவே
வேண்டின் அல்லால்
வேண்டும்பரிசு உண்டென்னில் அதுவும் உன்தன்
விருப்பன்றே.

— (மாணிக்கவாசகர்)

உற்ருரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன்
பேர்வேண்டேன்
கற்ருரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்ருலத் தமர்ந்துறையுங் கூத்தா உன்குரைகழற்கே
கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.

— (மாணிக்கவாசகர்)

---

*"பக்தனுடைய பலம் எதில் உள்ளது? அவன் ஈசுவரனு டைய குழந்தை; ஆதலால் பக்தியால் பெருகும் அவனது கண்ணீரே அவனுக்குப் பலமான ஆயுதம்."*

— ஸ்ரீராமகிருஷ்ணர்

வெறுப்பவனே செய்யும் என் சிறுமையை நின்
பெருமையினுற்
பொறுப்பவனே அராப்பூண்பவனே பொங்குகங்கை
சடைச்
செறுப்பவனே நின்திருவருளால் என் பிறவியை வேர்
அறுப்பவனே உடையாய் அடியேன் உன்
அடைக்கலமே
— (மாணிக்கவாசகர்)

பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து
பாவியேனுடைய
ஊனினைஉருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா
ஆனந்தமாய
தேனினைச் சொறிந்து புறம்புறந்திரிந்த செல்வமே!
சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்தருளுவதினியே.
— (மாணிக்கவாசகர்)

அங்கிங்கெனுதபடி எங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது? தன் அருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாம்
தங்கும்படிக் கிச்சைவைத்து உயிர்க்குயிராய்த்
தழைத்ததெது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது? சமயகோடிகளெலாம்
தந்தெய்வம் எந்தெய்வம் என்று
எங்குந் தொடர்ந்து எதிர்வழக்கிடவும் நின்றதெது?
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்ல ஒரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளதெது? மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லை உளதெது? அது
கருத்திற்கு இசைந்தது; அதுவே
கண்டன எலாம்; மோன உரு வெளியதாகவுங்
கருதி அஞ்சலி செய்குவாம். — (தாயுமானவர்)

---

"எத்திக்குந் தானுகி, என்னிதயத்தே யூறித்
தித்திக்கு மானந்தத்தேனே! பராபரமே!"

காடுங்கரையும் மனக்குரங்கு கால்விட்டோட அதன் பிறகே
ஓடுந்தொழிலால் பயனுளதோ ஒன்றுய்ப்பலவாய் உயிர்க்குயிராய்
ஆடுங்கருணைப் பரஞ்சோதி அருளைப் பெறுதற்கு அன்புநிலை
தேடும்பருவம் இதுகண்டீர் சேரவாருஞ் சகத்தீரே.

— (தாயுமானவர்)

நேற்றுளார் இன்றுமாளா நின்றனர் அதனைக்கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலேன் அகண்டானந்த அண்ணலே அளவில்மாயைச்
சேற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே.

— (தாயுமானவர்)

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்குவுன்னாதே — பருத்த தொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய் நரிகள் பேய் கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான்.

— (பட்டினத்தார்)

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதையோ கெடுவீர் இந்த மானிடமே.

— (பட்டினத்தார்)

---

*"ஓயாதோ என்கவலை? உள்ளேயா னந்தவெள்ளம்*
*பாயாதோ? ஐயா! பகராய், பராபரமே!"*

நல்லார் இணக்கமு நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ அகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சியேகம்பனே.

— (பட்டினத்தார்)

ஒன்றென்றிரு; தெய்வமுண்டென்றிரு;
உயர்செல்வமெல்லாம்
அன்றென்றிரு; பசித்தோர் முகம்பார்; நல்லறமும்
நட்பும்
நன்றென்றிரு; நடுநீங்காமலே நமக்கு இட்டபடி
என்றென்றிரு; மனமே! உனக்கு உபதேசமிதே.

— (பட்டினத்தார்)

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துருகி
நில்லாப்பிழையும் நினையாப்பிழையும்
நின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந்
தொழாப்பிழையும்
எல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே.

— (பட்டினத்தார்)

ஒருமையுடன் நினதுதிருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவுவேண்டும்
உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகலவாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்.
பொய்மை பேசாதிருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுகவேண்டும்
மதமான பேய்பிடியாதிருக்கவேண்டும்
மருவு பெண்ணாசையை மறக்கவேவேண்டும்
உனை மறவாதிருக்கவேண்டும்

---

''பாராயோ என்னை முகம்? பார்த்தொருகால் என்கவலை
தீராயோ? வாய்திறந்து செப்பாய் பராபரமே.''

மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்
நோயற்ற வாழ்வில் நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே!
தண்முகத் துய்யமணி! உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே!
— (இராமலிங்கசுவாமிகள்)

விளக்கறியா இருட்டறையில் கவிழ்ந்துகிடந்தழுது
விம்முகின்ற குளவியினும் மிகப்பெரிதும் சிறியேன்
அளக்கரியா துயர்க்கடலில் விழுந்து நெடுங்காலம்
அலைந்தலைந்து மெலிந்த சிறுதுரும்பதனின்
மிகத்துரும்பேன்
கிளக்கரியாக் கொடுமையெலாம் கிளைத்த பழுமரத்தேன்
கெடுமதியேன் கடுமையினேன் கிரிபேசும்
வெறியேன்
களக்கரியாப் புவியிடைநான் ஏன் பிறந்தேன்? அந்தோ!
கருணை நடத்தரசே உன்கருத்தை அறியேனே.
— (இராமலிங்கசுவாமிகள்)

உன்னை மறந்திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்னாணையிது நீ
என்னை மறந்திடுவாயோ மறந்திடுவா யெனில் நான்
என்செய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன்
எந்தாய்!
அன்னையினும் தயவுடையாய் நீ மறந்தாய் எனினும்
அகிலம் எல்லாம் அளித்திடும் நின்னருள்
மறவாதென்றே
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இதுதருணம் அருட்சோதி எனக்கு விரைந்தருளே.
— (இராமலிங்கசுவாமிகள்)

---

"எண்ணாத எண்ணமெலாம் எண்ணிஎண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே!"

மண்ணுளா நின்றவர்தம் வாழ்வுவேண்டேன்
மற்றவர்போல் பற்றடைந்து மாளவேண்டேன்
விண்ணுளா நின்றவொரு மேன்மை வேண்டேன்
வித்தக நின்திருவருளே வேண்டி நின்றேன்
புண்ணுளா நின்ற மனமுடையேன் செய்த
பொய்யனைத்தும் திருவுளத்தே பொறுப்பாயன்றிக்
கண்ணுளா சுடர்க்கமலக் கண்ணு என்னைக்
கைவிடில் என் செய்வேனே கடையனேனே.
— (இராமலிங்கசுவாமிகள்)

மாற்றறியாத செழும்பசும்பொன்னே, மாணிக்கமே
சுடர்வண்ணக்கொழுந்தே
கூற்றறியாத பெருந்தவருள்ளக் கோயிலிருந்த
குணப்பெருங்குன்றே
வேற்றறியாத சிற்றம்பலக்கனியே
வித்தையில் வல்லவர் மெச்சும் விருந்தே
சாற்றறியாதவென் சாற்றும் களித்தாய்
தனிநடராஜா என் சற்குருமணியே
— (இராமலிங்கசுவாமிகள்)

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய்நின்ற சோதிப்பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்கள்ஆறும் கரங்கள் பன்னிரெண்டும்
கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய.
— (கந்தபுராணம்)

நாளென்செய்யும் வினைதானென்செய்யும் எனைநாடி
வந்த
கோளென்செய்யும் கொடுங்கூற்றென்செய்யும்
குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்னே வந்து
தோன்றிடினே.
— (கந்தர் அலங்காரம்)

---

*"நன்றறியேன், தீதறியேன், நானென்று நின்றவன்ஆர்*
*என்றறியேன், நான் ஏழை, என்னே பராபரமே!"*

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

— (கந்தர் அநுபூதி)

ஏறுமயில் ஏறி விளையாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவவேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புரிய வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகமான பொருள் நீயருளல் வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமானே.

— (அருணகிரியார்)

துள்ளுமத வேட்கை – கணையாலே
தொல்லை நெடுநீலக் – கடலாலே
மெள்ளவருசோலைக் – குயிலாலே
மெய்யுருகுமானைத் – தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் – தெளிவோனே
செய்யகுமரேசத் – திறலோனே
வ்ள்ளல்தொழு ஞானக் – கழலோனே
வள்ளி மணவாளப் – பெருமானே

— (அருணகிரியார்)

பாதபங்கயமும், திருமுகம் ஆறும் பன்னிருகரங்களும் மருங்கில்
கீதகிண்கிணியும் கனவிலும் மறவேன், கேசவன் முராரி கோவிந்தன்
சீதரன் முகுந்தன் அச்சுதானந்தன் தேவகி நந்தனன் கண்ணன்
மாதவன் வரதன் மாயவன் திருமால்மருகனே வள்ளிநாயகனே.

— (அருணசிரியார்)

---

''எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைதான் பட்டதுயர்
அத்தனையும் நீயறிந்த தன்றோ? பராபரமே!''

மூவிரு முகங்கள் போற்றி;
முகம்பொழி கருணை போற்றி;
ஏவருந் துதிக்க நின்ற
ஈராறு தோள் போற்றி; காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள்
மலரடி போற்றி; அன்னான்
சேவலும் மயிலும் போற்றி,
திருக்கைவேல் போற்றி போற்றி.

— (கந்தபுராணம்)

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய் !
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு ;
நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன் ;
கரிய மாலோ அலைகடல் துயின்றோன் ;
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம் ;
குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன் ;
கலசமோ புவியிற் சிறுமண் ;
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம் ;
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம் ;
உமையோ இறையவர் பாகத் தொடுக்கம் ;
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம் ;
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

— (ஔவையார்)



"சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே."

உ

சிவமயம்

# ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்
## திருவாய்மலர்ந்தருளிய
# தமிழ் வேதமாகிய
# திருவாசகம்.

## நூற்சிறப்பு.

### நேரிசை வெண்பா.

*திருச்சிற்றம்பலம்.*

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளை நீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

## சிவபுராணம்.

*சிவனதநாதி முறைமையான பழமை.*
*திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.*

### கலிவெண்பா.

*திருச்சிற்றம்பலம்.*

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சில் நீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகின் றண்ணிப்பான் றாள்வாழ்க

---

*"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே*
*அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே."*

ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்ப மருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற வதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்
விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லையிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி

---

நல்லாரோடு கூடியிருந்து பகவான் நாமத்தை ஓது. அதற்கு நிகரான வாழ்க்கைப் பயன் வேறு ஒன்றுமில்லை.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கு நல்லறிவே
ஆக்க மளவிறுதி யில்லா யனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னற்றத்தி னேரியாய்ச் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திடமூடிய மாய விருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே

---

உலகத்தவர் வெளியில் காட்டுவது இன்பம்; உள்ளிருப்பது துன்பம். துறவி வெளியில் காட்டுவது துன்பம்; உள்ளிருப்பது உலப்பிலா ஆனந்தம்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

இன்பமும் துன்பமும் இல்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்ருப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார்
தங்கருத்தி
ஞேக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்ருன வுண்ணு ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானுர்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்ருடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

*திருச்சிற்றம்பலம்.*

---

இரக்கத்தோடு கூடிய உள்ளம் நல்ல கோயில் ஆகிறது. விசுவாசம் நிறைந்த வார்த்தை நல்ல வழிபாடு ஆகிறது. நேர்மையான வாழ்வே நல்ல நூல் ஆகிறது.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

ஓம் தத் சத்.

# லிங்காஷ்டகம்.

ப்ரம்ம முராரி சுரார்ச்சித லிங்கம்
நிர்மல பாஷித சோபித லிங்கம்
ஜென்மஜ துக்க விநாசன லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

தேவ முனிப்ரவரார்ச்சித லிங்கம்
காமதஹம் கருணாகர லிங்கம்
ராவண தர்ப்ப விநாசன லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

சர்வ சுகந்தி சுலேபித லிங்கம்
புத்தி விவர்த்தன காரண லிங்கம்
சித்த சுராசுர வந்தித லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

கனக மகாமணி பூஷித லிங்கம்
பணிபதி வேஷ்டித சோபித லிங்கம்
தக்ஷசுயக்ஞ விநாசன லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

குங்கும சந்தன லேபித லிங்கம்
பங்கஜஹார ஸுசோபித லிங்கம்
சஞ்சித பாபவிநாசன லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

தேவ கணார்ச்சித சேவித லிங்கம்
பாவைர் பக்திபி ரேவச லிங்கம்
தினகர கோடி பிரபாகர லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

---

எல்லாம் நினது செயல் என்றெண்ணும் எண்ணமும் நீ அல்லால் எனக்குளதோ ஐயா பராபரமே.

அஷ்டத லோபரி வேஷ்டித லிங்கம்
சர்வசமுத்பவ காரண லிங்கம்
அஷ்ட தரித்ர விநாசன லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

சுரகுரு சுரவர பூஜித லிங்கம்
சுரவந புஷ்ப சதார்ச்சித லிங்கம்
பராத்பரம் பரமாத்மக லிங்கம்
தத்ப்ரணமாமி சதாசிவ லிங்கம்

லிங்காஷ்ட கமிதம் புண்யம் ய:படேச்சிவ
சந்நிதெ
சிவலோக மவாப்னோதி சிவேன ஸஹமோததே.

---

கால கால காமதகன காசிநாத பாஹிமாம்
விசாலாக்ஷி அம்பசகித விஸ்வநாத ரக்ஷமாம்.

வந்தே தேவ உமாபதிம் சுரகுரும்
வந்தே ஜகத் காரணம்
வந்தே பன்னக பூஷணம் ம்ருகதரம்
வந்தே பசூனும்பதிம்
வந்தே ஸூர்ய சசாங்க வஹ்னி நயனம்
வந்தே முகுந்த ப்ரியம்
வந்தே பக்த ஜனாஸ்ரயஞ்ச வரதம்
வந்தே சிவம் சங்கரம்.



---

கொலை களவு கட்காமங் கோபம் விட்டால்அன்றோ
மலையிலக்கா நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே.

# ஹரிகுண மாலை

1. நாராயணா ஸ்ரீமந் நாராயணா பத்ரி நாராயணா
ஹரி நாராயணா
நாராயணா ஸத்ய நாராயணா ஸூர்ய நாராயணா
லக்ஷ்மி நாராயணா

2. நொந்துடலம் கிழமாகித் தளர்ந்தபின்
நோயில் நடுங்கிடும்போது — ஜீவ
நாடிகள் நைந்திடும்போது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — இன்று
சிந்தை கசிந்துனைக் கூவுகின்றேன் அருள்
செய்திடுவாய் ஹரி நாராயணா

3. நீடுகபம் கோழை ஈழை நெருக்கி என்
நெஞ்சை அடைத்திடும்போது — விக்கி
நாவும் குழறியபோது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — நான்
அன்றுனைக் கூவிட இன்றழைத்தேன் எனை
ஆண்டருள்வாய் ஹரி நாராயணா

4. ஐம்பொறியும் கரணங்களும் வாயுவும்
ஆடி அடங்கிடும்போது — எந்தன்
ஆவி பிரிந்திடும்போது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — இன்று
நம்பி உனைத்தொழுதே அழைத்தேன் ஜகன்
நாயகனே ஹரி நாராயணா

5. உற்றவர் பெற்றவர் மற்றவர் சுற்றமும்
ஓவென்று நின்றழும்போது — வுயிர்
ஓசைகள் ஓய்ந்திடும்போது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — இன்று
பற்றி உனைப்பணிந்தே அழைத்தேன் ஆபத்
பாந்தவனே ஹரி நாராயணா

---

நீ பேசுகிற பேச்சானது எப்படித் தோன்றி மறைகிறதோ அப்படியே உலகில் தோன்றியுள்ள நீயும் மறைந்து பட்டுப் போவாய் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

6. என் பொருள் என் மனை என்றதெல்லாம் இனி
இல்லை என்ருகிடும்போது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — நீ
அன்றுவரும் பொருட்டின் றழைத்தேன் அருள்
அச்சுதனே ஹரி நாராயணு

7. வந்தெம தூதர்வளைந்து பிடித்தெனை
வாவென்றிழுத்திடும்போது — மனம்
எண்ணிடுமோ தெரியாது — அந்த
அந்தியம்நீவர இன்றழைத்தேன் ஸச்சி
தானந்தனே ஹரி நாராயணு.

## ஓம் நமோ நாராயணுய

1. ஓம் நமோ நாராயணுய ஓம் நமோ நாராயணுய
ஓம் நமோ நாராயணுய ஓம் நமோ நமோ
சர்வலோக சாக்ஷியாகி ஸகலவேத ஸாரமாகி
ஸகலயோக சித்தியாகி நின்ற மூர்த்தியே!
ஸகல ஸத்துவங்களாகி பரமஞான வித்தையாகி
சகல சப்த வடிவமாகி வந்த மூர்த்தியே. (ஓம்)

2. அருண ஸகுண நிலையிலாகி
அசர சர விபாகமாகி
அதிலுமாகி இதிலுமாகி அமையும் மூர்த்தியே
அணுவுளே அகண்டமாட அணிவினுலனைத்தும் ஆட
அபரநாத வடிவிலாடும் அருணமூர்த்தியே (ஓம்)

3. எனது நானெனச் செறுக்கி மமதை
உற்றலைந்த என்னை
இனியனுக்கி இணையவைத்த இன்ப மூர்த்தியே
எனதுளத்திலுனது நாமம்
எழுதி வைத்து நடனமாடி
ஏகமாய் எனைக் கலந்த யோகமூர்த்தியே (ஓம்)

---

உனது ஆசைகளை ஒழித்துவிட நீ அறிந்து கொள்வாயாகில் நீ கற்கவேண்டியதை யெல்லாம் அப்பொழுது கற்ருய் விட்டது.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

4. படியெலாங் கடந்த சுத்த பிரம்ம வஸ்துவாய்
   பஜனையால் மகிழ்ந்து [இருந்தும்
தோன்றும் கருணைமூர்த்தியே
   ஒரு கணத்துள் எனதுளத்தை
உருகவைத்த உனது நாமம் (ஓம் நமோ)

5. அளவிலாமல் எழுவிசார
   அலையடித்த மருளகற்றி
அமைதிபெற்றடங்க வைத்த
   அன்புமூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுளத்தை
   உருக வைத்த உனது நாமம்
ஓம் நமோ நாராயணுய ஓம் நமோ நாராயணுய
   ஓம் நமோ நாராயணுய ஓம் நமோ நமோ.

## ஸத்ஸங்க மகிமை

1. ஸாதுக்கள் சங்கத்தையே—மனமே
   தஞ்சமடைந்திடுவாய்
ஸாது சங்கத்தில் அல்லால்—மற்ருென்றிலும்
   சாந்தி வராதறிவாய்.

2. பிள்ளைகள் போற்களிப்பார்—சித்தமற்ற
   பித்தரைப்போற் சிரிப்பார்—என்றும்
வெள்ளை மனத்தினராம்—அவர்பதம்
   வீழ்ந்து வணங்கிடுவாய்.

3. ஸாதனை மிக்குடையார்—எனினும்
   தம்மைப் புகழ்ந்தறியார்—விஸ்வ
நாதனையே துதிப்பார்—அவர்பதம்
   நாடி வணங்கிடுவார்.

---

உன்னுடைய இச்சா சுதந்திரத்தை ஒதுக்கித்தள்ளு. அப்பொழுது இறைவனுடைய திருவுளம் உன்மூலம் செயல் புரியும்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

4. வேண்டுதல் வேண்டாமை—இரண்டையும்
விட்டு விளங்கிடுவார்—அருள்
தூண்டின் நின்முன் வருவார்—அவர்பதம்
தொட்டு வணங்கிடுவாய்

5. ஆழியைப்போல் ஞானம்—எனினும்
ஆங்(கு) அலையற்றிருப்பார்—அவர்
வாழி யென்றால் வாழ்ந்தாய்—அவர்பதம்
வாழ்த்தி வணங்கிடுவாய்.

6. சிந்தையின் சேர்க்கையின்றி—அவர்பல
சித்துக்கள் செய்திடுவார்
மந்தரவேல் மயமாம்—மேனியரை
வாழ்த்தி வணங்கிடுவாய்.

7. உள்ளக் களிம் பகலும்—உண்மை ஒளி
உன்னுள் உதித்துயரும்—அள்ள
அள்ளக்குறையாமல்—பெருக்கெழும்
ஆனந்தத் தேனுவாய்.

8. ஞான சம்பூரணமே—சாதுசங்கம்
நல்கிடும் மா மருந்தாம்
ஆனதருந்திவிட்டால்—நீ கூறுவ
தானந்த மானந்தமே.

## ஞானத் தெளிவு

1. எண்ணமனைத்தும் அவன் வசம் வைத்தபின்
ஏக்கமும் உண்டாமோ—இந்த
மண்ணகத்தே தெய்வ வாசகம் கேட்டபின்
மாறுதலுண்டாமோ.

---

பணிகிறவன் உயர்நிலை யெய்துகிறான். வீண் கர்வம் கொள்பவனே வீழ்கிறான்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்

4. படியெலாங் கடந்த சுத்த பிரம்ம வஸ்துவாய்
பஜனையால் மகிழ்ந்து [இருந்தும்
தோன்றும் கருணைமூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுளத்தை
உருகவைத்த உனது நாமம் (ஓம் நமோ)

5. அளவிலாமல் எழுவிசார
அலையடித்த மருளகற்றி
அமைதிபெற்றடங்க வைத்த
அன்புமூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுளத்தை
உருக வைத்த உனது நாமம்
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நாராயணாய
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ.

## ஸத்ஸங்க மகிமை

1. ஸாதுக்கள் சங்கத்தையே—மனமே
தஞ்சமடைந்திடுவாய்
ஸாது சங்கத்தில் அல்லால்—மற்றொன்றிலும்
சாந்தி வராதறிவாய்.

2. பிள்ளைகள் போற்களிப்பார்—சித்தமற்ற
பித்தரைப்போற் சிரிப்பார்—என்றும்
வெள்ளை மனத்தினராம்—அவர்பதம்
வீழ்ந்து வணங்கிடுவாய்.

3. ஸாதனை மிக்குடையார்—எனினும்
தம்மைப் புகழ்ந்தறியார்—விஸ்வ
நாதனையே துதிப்பார்—அவர்பதம்
நாடி வணங்கிடுவார்.

---

உன்னுடைய இச்சா சுதந்திரத்தை ஒதுக்கித்தள்ளு. அப்பொழுது இறைவனுடைய திருவுளம் உன்மூலம் செயல் புரியும்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்)

4. வேண்டுதல் வேண்டாமை—இரண்டையும்
விட்டு விளங்கிடுவார்—அருள்
தூண்டின் நின்முன் வருவார்—அவர்பதம்
தொட்டு வணங்கிடுவாய்

5. ஆழியைப்போல் ஞானம்—எனினும்
ஆங்(கு) அலையற்றிருப்பார்—அவர்
வாழி யென்றால் வாழ்ந்தாய்—அவர்பதம்
வாழ்த்தி வணங்கிடுவாய்.

6. சிந்தையின் சேர்க்கையின்றி—அவர்பல
சித்துக்கள் செய்திடுவார்
மந்தரவேல் மயமாம்—மேனியரை
வாழ்த்தி வணங்கிடுவாய்.

7. உள்ளக் களிம் பகலும்—உண்மை ஒளி
உன்னுள் உதித்துயரும்—அள்ள
அள்ளக்குறையாமல்—பெருக்கெழும்
ஆனந்தத் தேனுவாய்.

8. ஞான சம்பூரணமே—சாதுசங்கம்
நல்கிடும் மா மருந்தாம்
ஆனதருந்திவிட்டால்—நீ கூறுவ
தானந்த மானந்தமே.

## ஞானத் தெளிவு

1. எண்ணமனைத்தும் அவன் வசம் வைத்தபின்
ஏக்கமும் உண்டாமோ—இந்த
மண்ணகத்தே தெய்வ வாசகம் கேட்டபின்
மாறுதலுண்டாமோ.

---

பணிகிறவன் உயர்நிலை யெய்துகிறான். வீண் கர்வம் கொள்பவனே வீழ்கிறான்.

— அருள்விருந்து (தர்ம சக்கரம்

2. தெய்வீகப் பேரொளி தேடியடைந்தபின்
சிந்தனை யுண்டாமோ—அவன்
கை வைத்தருட் பெரும் காக்ஷியளித்த பின்
கம்பிதம் உண்டாமோ.

3. உள்ளத்திலே அருளூறிய பின்பிடை
யூறுகள் உண்டாமோ—ஞான
வெள்ளப்பெருக்கு விழுங்கிய பின்னரும்
வேதனை உண்டாமோ

4. ஆண்டவன் ஆதி ஸதாசிவன் ஆட்சியில்
அச்சமும் உண்டாமோ—உன்னைத்
தூண்டி நடத்தும் சுயம் ஜோதியான பின்
சோர்வதும் உண்டாமோ.

5. ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே என்று
ஆனந்தக் கூத்திடுவாய்—பர
மாத்ம ஸ்வரூபம் அறிந்துகொண்டேன் என்று
ஆனந்தக் கூத்திடுவாய்.

சுபம்.

---

பந்தங்களில் கட்டுண்டிருக்கும் ஆத்மா ஜீவன். பந்தங்களினின்று விடுபட்டிருக்கும் ஆத்மா சிவன்.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்

## திருக்குறள்.




அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்.

யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு.

சொல்லுக சொல்லைப் பிரிது ஓர்சொல் அச்சொல்லை
வெல்லும் சொல் இன்மை அறிந்து.

அற்றார் அழி பசிதீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள் வைப் புழி.

மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல் எனுஞ் சொல்.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.

தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

இறவாத இன்ப அன்புவேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் பிறப்புஉண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும்வேண்டும் நான்மகிழ்ந்துபாடி
அறவா ! நீ ஆடும்போது உன்அடியின்கீழ் இருக்க என்றார்.

— (காரைக்காலம்மையார்)



ராமாஸ்ரமம்

லிட்டரரி பிரஸ், சேலம்—1.